REGD. No: TN/MS (C) 744 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு



**உழைப்பு**

உழைப்பே செல்வம் உழைப்பவர்க்கே உரிமையெல்லாம் உண்டு. உழைப்பாளிக்கே உலகம் உரியது

பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்

**செல்வம்**

முதலாளித்துவத்தைக் கண்டு நான் பயப்படவில்லை. செல்வம் ஒரே இடத்தில் சிலர் கைகளில் குவிவது கூடாது.

-அண்ணல் காந்தி



மலர்: 3 (●) சென்னை 3—5—1979 வியாழன் (*)❋●❋(*) வேலூர் 4—5—1979 வெள்ளி (●) இதழ்: 194

### பெரியார் நூற்றாண்டு நிறைவு விழாவின்போது

# அரசு ஊழியருக்கு புதிய சலுகை: புரட்சிதலைவர் அறிவிப்பு

**சென்னை, மே, 3 செப்டம்பர் 15-ம்தேதிதந்தைபெரியார் நூற்றாண்டுவிழாவின் போது அரசு ஊழியர்களுக்கு மகிழ்ச்சித் தரும் செய்தியை அரசு அறிவிக்கும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்தார்.**

தமிழ்நாடு அரசு அலுவலர் கழகத்தின் சார்பில் தந்தை பெரியார் நூற்றுண்டு விழாவும் மேதின விழாவும், கழக அலுவலகத் திறப்பு விழாவும் நேற்று கொண்டாடப்பட்டது.

இந்த முப்பெரும் விழா நேற்று இரவு சேப்பாக்கம் அரசு அலுவலக வளாகத்துக்குள் நடந்தது.

விழாவுக்கு மாநிலத் தலைவர் இரா. முத்தானந்தம் தலைமை வகித்தார். மாநில பொதுச் செயலாளர் கி. க. மோகன் வரவேற்புரை நிகழ்த்தினர்.

தந்தை பெரியாரின் திருஉருவப்படத்தை முதல்வர் புரட்சித்தலைவர் திறந்து வைத்தார் மாநில கழகத்தின் அலுவலகத்தை அமைச்சர் பொன்னையன் திறந்து வைத்தார்.

விழாவில் அமைச்சர் சவுந்தர பாண்டியனும் கலந்து கொண்டு பேசினர்

விழாவில்பெரும் அளவில் அரசு ஊழியர்கள் கலந்து கொண்டனர்.

பல்வேறு அமைப்புக்களின் சார்பில் முதல்வர் புரட்சித்தலைவருக்கு மாலைகள் அணிவிக்கப்பட்டன.

விழாவில் முதல்வர் புரட்சித்தலைவர் பேசியதாவது:

நண்பர் முத்தானந்தம் எப்படி ஒரு சங்கத்தை உருவாக்கினர் என்ற சந்தேகம் எனக்கு இருந்தது இன்று அந்த சந்தேகம் தீர்ந்து விட்டது.

அவர் எப்படிப்பட்ட சாமர்த்தியசாலி என்பதை அவரது பேச்சுவன்மை காட்டியது.

## வாழ்வு அளிக்க

எதையும் கேட்கவில்லை எதையும் கேட்கவில்லை என்று சொல்லி ஏதாவது ஒன்றை சொல்லி தீர வேண்டிய சூழ்நிலையை உருவாக்கி இருக்கிறார் அப்படிப்பட்ட சாமர்த்தியசாலியைப் பாராட்டக் கடமைப்பட்டு இருக்கிறேன்

இன்று உள்ள பிரச்சினை நாட்டில் உள்ள மக்களுக்கு வாழ்வு அளிப்பது எப்படி என்பதுதான்

இது எம் ஜி ராமச்சந்திரனல் முடியுமா என்றால் என் ஒருவனல் முடியாது தான்.

எம் ஜி ராமச்சந்திரனுக்கு அரசைப்பற்றி ஒன்றும் தெரியாது என்று சொல்வதாகச் சொன்னர்கள்.

அவர்களை அப்படி பேச விட்டு விட்டு நான் முதலமைச்சர் ஆகி இருக்கிறேன். தெரியாது என்றுசொல்ல அவர்களுக்கு உரிமை இருக்கிறது

அப்படிப் பேசமுடியாத நிலையை ஏற்படுத்தி இருந்தால் எனக்கு அரசைப் பற்றித் தெரியும் என்று கருதுவார்களோ என்னவோ

ஒரு உண்மை தெரிகிறது எப்படி நடந்து கொள்ள வேண்டுமோ அப்படி நான் நடந்து கொள்ளாதது தவறு என்று தெரிகிறது.

இங்கே பேசிய முத்தானந்தம் தான் பட்ட கஷ்டத்தையும், இப்போது இந்த சங்கத்திற்கு வருபவர்களுக்கு ஏற்படும் தொல்லைகள் பற்றியும் குறிப்பிட்டார்.

பாதுகாப்பு வேண்டும் என்றுகேட்காவிட்டாலும் பாதுகாப்பு வேண்டும் என்று கருத்துப்பட தெரிவித்தார்.

## வன்முறை தாக்குதல் ஒழியும்

வலிவுள்ளவர்கள் என்பதால் முன்னால் வசதிபெற்றவர்கள் என்பதால் வன்முறையாளர்கள் இருக்கிறார்கள் என்பதால் பிறரைத் தாக்குவது அடிப்பது என்பதை இந்ததமிழகஅரசும் நானும் அனுமதிக்க முடியாது.

(கைதட்டல்)

யாரும் அச்சப்படத் தேவையில்லை.

(மீண்டும் கைதட்டல்)

சங்கம் வைக்க அனைவருக்கும் உரிமை இருக்கிறது.

அரசியலைப் பயன்படுத்தும் தொழிற்சங்கத்தலைவர்கள் என் மீதும் என் அரசு மீதும் சாட்டும் குற்றச்சாட்டு 'நான் தொழிலாளிகளுக்கு எதிரி தொழிற்சங்கத்தை உடைக்க உதவுகிறேன் என்று குற்றஞ்சாட்டுகிறார்கள்.

ஆனால் அப்படிச்சொல்பவர்கள் சங்கம் துவக்க பாதுகாப்பு தருகிறோம்.

ஒருபக்கம் அழிக்கக் காரணம் என்கிறார்கள், மறுபக்கம் சங்கம் ஆரம்பிக்க அனுமதி கேட்கிறார்கள்.

மத்தளத்திற்கு இரண்டு பக்கமும் இடி என்பதைப் போல இவைகளையெல்லாம் தாங்கிக்கொண்டு பணியாற்றுகிறோம்.

ஒவ்வொரு மனிதனும் தனது மனசாட்சியிடம் கேள்வியை கேட்டு, பதிலை பெற்று நிம்மதி பெறவேண்டும்.

நான் சினிமாத் துறையில் பணியாற்றிய போது இப்படிப்பட்டபலசோதனைகளை அனுபவித்தது உண்டு

வேலைகேட்டு ஒருவர் வருவார் அவருக்கு ஒரு

(2-ம் பக்கம் பார்க்க)



## முதல்வர் நடத்திய ராகவானந்தம் இல்லத் திருமணம்

**சென்னை மே 3—தொழிலாளர் நலத்துறை அமைச்சர் ராகவானந்தத்தின் மகன் - இரு மகள்கள் திருமணங்களை முதல்வர் புரட்சித தலைவர் இன்று காலை நடததிவைத்தார்.**

இந்த திருமணங்கள் கலைவாணர் அரங்கில் நடந்தன

அமைச்சர் ராகவானந்தத்தின்மகன் விடுதலைக்கும் செல்வி சங்கரிக்கும்,

ராகவானந்தத்தின்மகள் சமதர்மத்திற்கும்செல்வன் ஆறுமுகத்திற்கும்,

ராகவானந்தத்தின் மற்றோர் மகள் பொற்கொடிக்கும், செல்வன் சவுந்தரராசனுக்கும் முதல்வர் புரட்சித்தலைவர் திருமணத்தை நடத்திவைத்தார்.

மணமாலையை திருமணத் தம்பதிகளிடம் எடுத்துக் கொடுத்துமங்கலநாணையும் எடுத்துக்கொடுத்தார்

திருமண விழாவிற்கு வந்திருந்தவர்களை அமைச்சர் ராகவானந்தம் வரவேற்றார்.

முதல்வர் புரட்சித்தலைவரின் துணைவியார் ஜானகி அம்மையாரும் திருமணத்திற்கு வருகை தந்திருந்தார். தமிழக ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி, சட்டபேரவைத் தலைவர் முனு ஆதி, மேலவைத் தலைவர் சிலம்புச்செல்வர் ம.பொ.சி மேலவை துணைத் தலைவர் ஜி சாமிநாதன், அமைச்சர்கள் பண்ருட்டி ராமச்சந்திரன் ஆர் எம் வீ, வழக்கறிஞர் என் சி ராகவாச்சாரி கழக மகளிர் பிரிவுச் செயலாளர் வளர்மதி, தொழிலாளர் தலைவர்கள் ஆனந்தன், குருமூர்த்தி ஆகியோர் மணமக்களை வாழ்த்திப்பேசினார்கள்

திருமண விழாவுக்கு அமைச்சர் பெருமக்கள், நாடாளுமன்ற உறுப்பினர்கள், சட்டமன்ற மேலவை உறுப்பினர்கள், கழகத் தலைவர்கள், கழகத்தோழர்கள், பிரமுகர்கள், அதிகாரிகள் வந்திருந்தனர்.

விழா இறுதியில் அமைச்சர் ராகவானந்தத்தின் அண்ணன் எஸ், பாலகிருஷ்ணன் நன்றி கூறினர்.

# நாராயணசாமி நாயுடு தேசதுரோகச் செயல்: குழந்தைவேலு கண்டனம்

**வந்தவாசி, மே. 3 விவசாய சங்கத்திற்கு ரூ 25 சந்தா செலுத்தினல் நிலவரி கட்டத் தேவையில்லை என்றும் கடனுக்காக ஜப்தி செய்ய அலுவலர்கள் வந்தால் வெட்டுங்கள், குத்துங்கள், என்றும் கூறி நாராயணசாமி நாயுடு வன்முறையை தேசவிரோத சக்திகள் மூலம் தூண்டி வருகிறர் என்று அமைச்சர் குழந்தைவேலு கூறினர்**

வட ஆற்காடு மாவட்டத்தில் வந்தவாசிக்கு அருகில் உள்ள தேசூரில் ஒழுங்குமுறை விற்பனைக் கூடத்தை அமைச்சர் குழந்தைவேலு துவக்கி வைத்துச் சிறப்புரையாற்றினார்.

இவ்விழா சட்டமன்ற உறுப்பினர் சந்திரன் தலைமையில் நடைபெற்றது தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத் தலைவர் ஏ.கே. அரங்கநாதன் சட்டமன்ற உறுப்பினர் முனுசாமி, வேளாண்மை விளைபொருள் விற்பனைத்துறை இயக்குநர் பாண்டி பெருமாள் ஆகியோர் சிறப்புரையாற்றினர். அமைச்சர் குழந்தைவேலு கூறியதாவது:

"விவசாயிகள் பிரச்சினை என்பது கழகம் ஆட்சிக்கு வந்தபின் ஏற்பட்டதல்ல. கடந்த 35 ஆண்டு காலமாகவே விவசாயிகள் பிரச்சினை இருந்து வருகிறது ஆனால் விவசாயிகளின் பிரச்சினைகளுக்கு நல்ல தீர்வுகாண வேண்டும் என்பதற்காக இந்தியாவிலேயே முதல் முதலாக உயர்மட்டக் குழுவை அமைத்தது புரட்சித்தலைவர் அரசுதான்.

அந்த உயர்மட்டக் குழுவில் ஒரு உறுப்பினராக இருந்த நாராயணசாமி நாயுடு அரசியல் இலாபம் தேடுவதற்காக - குறுக்கு வழியில் பணக்காரராக ஆவதற்காக - திடீரென்று தான் உயர்மட்டக் குழுவில் உறுப்பினரில்லை என்று அறிவித்துவிட்டார். உண்மையிலேயே விவசாயிகளின் மேல் அக்கறை இருந்திருந்தால்; உயர்மட்டக்குழுவில் தொடர்ந்து உறுப்பினராக இருந்து. விவசாயிகளின் பிரச்சினைகளை நல்ல முறையில எடுத்துக்கூறி வாதாடி, விவசாயிகளுக்குப் பல சலுகைகளை பெற்றுத்தர முயன்றிருப்பார். உயர்மட்டக்குழு அளிக்கும் பரிந்துரைகளை ஏற்று அரசு நல்ல முடிவு எடுத்து சலுகைகளை அறிவிக்கவில்லையானல் நாராயணசாமிநாயுடு விவசாயிகள் போராட்டத்தைத் தொடங்கி இருந்தால் அதிலே நியாயம் இருக்கிறது

அதை விட்டுவிட்டு உயர்மட்டக் குழுவில் பேச்சுவார்த்தை நடந்துகொண்டிருக்கும்போதே இடைக்கால நிவாரணமாக சலுகைகளை புரட்சித்தலைவர் அரசு அறிவித்துவிட்ட பிறகுபுரட்சித்தலைவர் அவர்கள் விவசாயிகளுக்காகமின் சாரக்கட்டணத்தையூனிட் 16 பைசா என்பதிலிருந்து சிறு விவசாயிகளுக்குயூனிட்



12 பைசா என்றும், பெரிய விவசாயிகளுக்கு 14 பைசா என்றும அறிவித்த நேரத்தில் "மாலைவாங்கிவராமல் வந்து விட்டேன். முதலமைச்சர் நான் மாலை அணிவித்துப் பாராட்டுவ

(2ம் பக்கம் பார்க்க)



சிறந்த திரைப்படங்கள் கலைஞர்களுக்கான அரசு பரிசளிப்பு விழாவில் "16 வயதினிலே" தயாரிப்பாளர் ராஜ்கண்ணுவுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் பதக்கம் வழங்கிறார்.

### அண்ணா தொழிற்சங்க பேரவை சார்பில்

# தனிச்சங்கம் அமைப்பதுஏன்?

## முதல்வர் புரட்சித்தலைவர் விளக்கம்

**சென்னை, மே, 3 - தொழிற்சாலைகளில் அண்ணா தொழிற்சங்கப்பேரவை சங்கம் துவக்கும் சூழ்நிலையை முதல்வர் புரட்சிததலைவர் இன்று விவரிததார் தொழிற் சங்கங்களுக்கு தொழிலாளரே தலைவராக வர வேண்டும என்ற கருததை முதல்வராக வந்த பிறகு நான் தெரிவிக்கவில்லை 20 ஆண்டு காலமாக சொல்லி வருகிறேன் என்றும் முதலவர் தெரிவிததார்**

அமைச்சர் ராகவானந்தம் இல்லத்திருமண விழாவில் மணமக்களை வாழ்த்தி புரட்சித்தலைவர் பேசியதாவது

தொழிற்சங்கத்தலைவர்களும், பல்வேறு கட்சிகளில் இருக்கும் மாறுபட்ட கருத்துக்குச் சொந்தக்காரர்களும் இங்கே மணமக்களை வாழ்த்தியிருக்கிறார்கள்.

இப்படிப்பட்ட எளிமையான-சீர்திருத்ததிருமணத்திற்கு ஒப்புக் கொண்ட மணமக்களின் பெற்றோர்களையும் நான் பாராட்ட கடமைப்பட்டு இருக்கிறேன்.

ஏதோ ஒரு அமைச்சர் மகன்-மகள் என்று கருதாமல் அவர் யார் எப்படிப்பட்ட சீர்திருத்தக் கருத்துக்குச் சொந்தக்காரர் என்று தெரிந்து ஒப்புதல் தந்திருக்கிறார்கள்.

காரணம், இப்படிப்பட்ட பெரியவர்கள் எளிதில் சீர்திருத்த திருமணங்களை ஏற்பதில்லை, ஆனல் இவர்கள் ஏற்று இருக்கிறார்கள்.

இங்கே பேசியவர்கள் அனைவருக்கும் பதில் தராவிட்டாலும் நண்பர் குருமூர்த்தி பேசிய கருத்துக்கு மட்டும் பதில் சொல்வது என்னுடைய கடமையாகும்

ஒரு தொழிற்சாலையில் அங்கீகரிக்கப்பட்ட சங்கம் இருக்கும்போது பல சிறு சிறு சங்கங்களும் இருக்கின்றன அப்படிப்பட்ட இடங்களில் அண்ணா தொழிற்சங்கப் பேரவை சங்கம் துவக்க தேவையில்லை என்றார்.

கருத்துவேறுபாடு இல்லை என்றால் கழகச் சங்கத்திற்கும் இடம் இல்லை.

அங்கீகரிக்கப்பட்ட யூனியன் இருக்குமிடத்தில் சிறு சிறு சங்கங்களும் இருக்கின்றன என்பதை அவர் ஏற்றுக்கொண்டு இருக்கிறார். சிறு சிறு சங்கம் ஏன் தோன்றுகின்றன என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும்

கருத்து வேறு பாடுஇருப்பதால் இப்படி சிறு சிறு

(2-ம் பக்கம் பார்க்க)

## பி. டி. எஸ். பாக்தாத் பயணமானர்

சென்னை, மே 3-கூட்டுசேரா மற்றும் வளர்ந்து வரும் நாடுகளின்பெண்கள் மாநாடுஈராக் தலைநகரான பாக்தாத்தில் நடைபெறுவதை யொட்டி இந்தியப் பிரதிநிதியாக அமைச்சர் பி. டி. எஸ். பாக்தாத் பயணமானர்.

நேற்று மாலை 7.10 மணிக்கு டெல்லி விமானத்தில் அமைச்சா பி. டி. எஸ் புறப்பட்டுச் சென்றார். டெல்லி புறப்பட்ட விமானம் நடுவானில் கோளாறு

(2-ம் பக்கம பார்க்க)

# ராகுகாலமனிதர் கருணநிதி: அமைச்சர் ஆர்.எம்.வீ. கடும்தாக்கு

சென்னை, மே, 3- கருணநிதி ராகுகாலமனிதர் என்று அமைச்சர் ஆர் எம் வீ குறிப்பிட்டார்;

அமைச்சர் ராகவானந்தம இல்லத்திருமண விழாவில் பேசும்போது அமைச்சர் ஆர் எம் வீ மேற்கண்டவாறு கூறினர்

மேலும் அவர் பேசுகையில் கூறியதாவது:-

இங்கே பேசிய மேலவை துணைத்தலைவர் ஜி சாமிநாதன். ராகவானந்தம், ராகுகாலத்தில் முன்பு எம் எல் சி யாக பதவி ஏற்றார்

அந்த காலம் முழுவதும் அந்த பதவியில் இருக்க முடியாமல் போய்விட்டது அதற்குக்காரணம் ராகுகாலமா ராகவானந்தமா என்று கூறினர்.

எல்லாராலும் பாராட்டப்பட்ட ராகவானந்தம் பகுத்தறிவு இயக்கத்தில் வளர்ந்தவர் இப்படிப்பட்டவருக்குஎப்படிப்பட்ட துரோகத்தை இழைத்தார்கள் என்பதை அனைவரும் தெரிந்து கொள்ள வேண்டும்.

ராகுகாலமா? ராகவானந்தமா என்றுசாமிநாதன் கேட்டார். ராகவானந்தம் ராகுகாலத்தில் நம்பிக்கை இல்லாதவர்.

வெறும் காகிதத்தில் ராகவானந்தம் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தார். யாரை நம்பி அவர் கையெழுத்துப் போட்டுத் தந்தாரோ அந்த மனிதர் நம்பிக்கை துரோகம் செய்து விட்டார்.

தந்தை பெரியாரின் கொள்கையை 40 ஆண்டு

(2-ம் பக்கம் பார்க்க)

## ஆர்எம்வீ தாக்கு

(1-ம் பக்க தொடர்ச்சி)

காலமாக கடைபிடித்து வருபவர் ராகவானந்தம். பெரியாரின் சீடர் என்று சொல்லிக் கொள்ளுபவர் ராகவானந்தத்திற்கு நம்பிக்கை துரோகம் செய்துவிட்டார்.

இவர் ராகுகாலம் அல்ல ராகுகாலம் சில மனிதர்களின் உருவில் நடமாடுகிறது.

யாரை இவர் நம்பிக் கொண்டிருந்தாரோ அவர் நம்பிக்கை துரோகத்தை மோசடியை செய்து ராஜினாமா செய்ய வைத்து விட்டார்.

அவர்கள் சண்முன்னலேயே எம் எல் சி யாக ஆக்கி அமைச்சராக ஆக்கி மாண்புமிகு அமைச்சர் அவர்களே என்று கூற வைத்த பெருமை புரட்சித் தலைவரையே சாரும்.

புரட்சித்தலைவர் இல்லையென்றால் நாங்கள் இல்லை ராகவானந்தம் எப்போதோ காலவெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டிருப்பார்.

பேரறிஞர் அண்ணா வழியில் புரட்சித் தலைவர் குடும்ப பாசத்தை உருவாக்கி எங்களை வழி நடத்திச் செல்கிறார்.

இவ்வாறு அமைச்சர் ஆர் எம் வீ கூறினார்

## பி டி எஸ். பயணமானார்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

ஏற்பட்டதன் காரணமாக 7-40 மணிக்கு மீண்டும் சென்னை வந்து சேர்ந்தது.

இன்று (3ந்தேதி காலை 6 மணிக்கு அமைச்சர் பி.டி. எஸ் டெல்லி புறப்பட்டுச் சென்றார்.

அமைச்சர் பி.டி. எஸ்சை வழியனுப்ப நேற்று மாலை முதல்வர் புரட்சித் தலைவர் அமைச்சர்கள்பண்ருட்டி ராமச்சந்திரன், ராகவானந்தம், எட்மண்ட், சவுந்தரபாண்டியன்பொன்னையன், கழக செயலாளர்கள் அப்துல் காதர், வை. பெருமாள், மதுரை வளர்மதி, தலைமை கழக நிர்வாகி துரை, சத்யா பத்மநாபன், கஸ்தூரிபாலன், சகுந்தலா, ஆண்டாள் ரவூத், சரசம்மாள் கைகம்மாள்மற்றும் ஏராளமான அரசு அதிகாரிகள் ஏராளமானகழகத்தோழர்கள், மகளிர் பிரிவினர் வழியனுப்பி வைத்தனர்.

டெல்லியிலிருந்து இன்று மாலை பாக்தாத விமானம் மூலம் அமைச்சர் பி. டி. எஸ். பாக்தாத் செல்கிறார்.

தென்சென்னை நாடாளுமன்ற தொகுதி

# எம். ஜி. ஆர். மன்ற ஆலோசனை கூட்டம்

தென் சென்னை நாடாளுமன்ற தொகுதிக்குட்பட்ட அனைத்துலக எம் ஜி ஆர் மன்றத்தில் பதிவு செய்த சார்பு மன்றங்களின் ஆலோசனைக்கூட்டம் வரும் 6ம்தேதி காலை 9 மணி அளவில் சென்னை அசோக்நகர் "திருமதி இராணி அண்ணா திருமணக் கூடத்தில் நடைபெறும்.

கழக நிர்வாகிகளும் அனைத்துலக எம். ஜி. ஆர். மன்ற நிர்வாகிகளும், அமைச்சர் பெருமக்களும், நாடாளுமன்ற உறுப்பினர்களும் கலந்து கொள்ள இருக்கிறார்கள்.

மன்ற நிர்வாகிகள் தவறாது கலந்து கொள்ள கேட்டுக் கொள்கிறேன்.

எல்லா மன்றங்களுக்கும் அழைப்பிதழ்கள் அனுப்பி வைக்கப்பட்டுள்ளன. கிடைக்கப் பெறாத மன்ற நிர்வாகிகள் 4 5-79ம் தேதி மாலை 6 மணிக்குள் என்னுடன் தொடர்பு கொள்ளவும்.

கு கூ. செல்வம்
செயலாளர்
தென்சென்னை நாடாளு மன்ற தொகுதி எம். ஜி. ஆர் மன்றம்.

### நிகழ்ச்சி விவரம்:

காலம் : 6-5-79 ஞாயிறு காலை 9 மணி
இடம் : சென்னை அசோக்நகர், "திருமதி இராணி அண்ணா" திருமணக்கூடம்
தலைமை : மு. பச்சையப்பன்
முன்னிலை : தி. நகர் மூர்த்தி, மு. ராஜேந்திரன், எம். நடராஜன், ஏ. தம்பையா, கே. எம். எஸ். அமீது, ஆர். சண்முகானந்தம், வி. கு. சச்சிதானந்தம், கே. கலியமூர்த்தி.
வரவேற்பு : எஸ் எஸ். சிவசூரியன், தஞ்சை பசுபதி, பி. வி. கிருட்டிணவன். கோ. கதிரவன்.

சிறப்புரை:

பெரியவர் ஈ வெ அ வள்ளிமுத்து
(கழக அவைத்தலைவர்)
டாக்டர் நாவலர்
(கழக பொதுச் செயலாளர்)
மாண்புமிகு சவுந்தரபாண்டியன்
(அரிசன நலத்துறை அமைச்சர்)
மாண்புமிகு திருச்சி ஆர். சவுந்தரராஜன்
(அனைத்துலக எம். ஜி. ஆர். மன்ற பொதுச்செயலாளர்)
மாண்புமிகு முசிறிபுத்தன்
(தலைவர்)
கே கண்ணன்
(அனைத்துலக எம் ஜி. ஆர். மன்ற பொருளாளர்)

மற்றும் கழக செயலாளர்களும், மாண்புமிகு அமைச்சர் பெருமக்களும், நாடாளுமன்ற உறுப்பினர்களும், மாவட்ட கழக நிர்வாகிகளும், எம் ஜி ஆர் மன்ற நிர்வாகிகளும் கலந்துகொள்வார்கள்.

நன்றியுரை : மு சங்கரையா.

20 சதவிகித தள்ளுபடி

## 25-வது அகில இந்திய கைத்தறி கண்காட்சி

★★★★★ வெள்ளி விழா ★★★★★

இடம் : திருச்சி தெப்பக்குளம் பிஷப் ஹீப்பர் மேல நிலைப்பள்ளி மைதானம்

2-5 79 முதல் 6 5 79 வரை

இக் கண்காட்சியில் கண்ணைக்கவரும் வண்ண வண்ண கைத்தறி பட்டுச் சேலைகளும் பருத்தி, பாலியெஸ்டர் துணிகளும், வேட்டிகளும், துண்டுகளும், லுங்கிகளும், படுக்கை விரிப்புகளும், திரை சீலைகளும், கார்ப்பெட்களும் பெருமளவில் தினசரி விற்பனையாகிறது.

பொதுமக்கள் இப்பொன்னான வாய்ப்பை பயன்படுத்தி கைத்தறித் துணிகளை வாங்கி பயன் பெறுவதோடு அதன் மூலம் கைத்தறிக்கும் கைத்தறி நெசவாளர்களுக்கும் பேராதரவு கொடுக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்.

கண்காட்சியில் 20 சதவிகித தள்ளுபடி உண்டு

தமிழ்நாடு கைத்தறி நெசவாளர் சங்கம் லிமிடெட் (கோ-ஆப்டெக்ஸ்)

# புரட்சித்தலைவர் அறிவிப்பு (1ம் பக்கத் தொடர்ச்சி)

இடத்தில் வேலைக்கு ஏற்பாடு செய்வேன்.

ஒருவாரம் கழித்து இன்னொருவர் வருவார்முதலில் வேலை பெற்றவருக்கு அவரது வீட்டில் வேலை செய்பவர் இருவர் இருக்கிறார்கள் எனதுவீட்டில் யாரும் வேலையில் இல்லை, வயதான தாய் தந்தையர் திருமணம் ஆகாத தங்கை, இந்த நிலையிலிருக்கிறேன் எனக்கு உதவாமல் அவருக்கு உதவினீர்களே என்று கேட்பார்.

என்னுடையநிலைசோதனையாக இருக்கும் என்மனச்சாட்சியிடம் கேள்வி கேட்பேன்,

இவர் அவருக்கு முன்னாலேயே வரவில்லை ஆகவே நான் அதற்குப்பொறுப்பாளி அல்ல என்று சமாதானம்பெறுவேன்

இப்படிப்பட்ட நிலையில் தான் நாங்கள் இருக்கிறோம்.

### பாரபட்சம் கிடையாது

ஒரு கண்ணில் வெண்ணை மறுகண்ணில் சுண்ணாம்பு என்ற நிலையில் நாங்கள் செயல்படவில்லை.

எத்தனை லட்சம் உறுப்பினர்கள் இருக்கிறார்கள் என்றோ எங்களுக்கு ஆதரவாக இருக்கிறார்களா என்றோ நாங்கள் பார்க்கவில்லை.

அவர்கள் உள்ளம்-மனச்சாட்சி தான் இவைகளைத் தீர்மானிக்க வேண்டும்.

இதையெல்லாம் கணக்கிட்டு ஆதரவுதருகிறார்கள் அடிமையாக கருதலாம் என்று நான் கருதினால்நான் முதலமைச்சர்பதவிக்குலாயக்கு இல்லை.

அதிகாரிகள் யாராவது துரோகம் செய்தால் தகவல் கொடுங்கள் கவனிக்கிறேன்.

பழிவாங்க யாரையாவது அதிகாரிகள் மாற்றினால் அரசு அதனைக் கவனிக்கும்.

உங்கள் பிரச்சினை மகத்தானது. சாமி வரம் கொடுத்தாலும் பூசாரி வரம் கொடுக்கவில்லை என்பார்கள். அரசு தந்தாலும் மத்தியில் இருப்பவர்கள் இடையூறாக இருக்கிறார்கள் என்ற நிலை கூடாது.

ஒரு மரத்திற்கு ஆணிவேர் மிக முக்கியம் அப்படிப்பட்ட மரம் விழுதுவிட்டு வளரும் ஆலமரமாக இருக்கும்

இந்தசங்கமும் அதுபோல வளரவேண்டும்எந்த ஆட்சி வந்தாலும் இதன் கோரிக்கையை ஏற்காமல் இருக்க முடியாது என்றுசொல்லும் நிலை ஏற்பட வேண்டும்

இங்கே மூன்று நிகழ்ச்சிகளை நடத்துகிறீர்கள். மே தின நிகழ்ச்சி உழைப்பவர்களின் உரிமையைஎடுத்துக்காட்டும் நாள்.

நேற்றுநான் தொழிலாளர் நிகழ்ச்சியில் பேசியபோது தொழிலாளர்களுக்காக சட்டம் கொண்டுவர வேண்டும் என்று பேசி இருக்கிறேன்,

### பார்-அட்லா பார்வைக்கு...

நேற்று அதே நேரத்தில் வேறு இடத்தில் ஒரு பார்-அட்லா படித்த தொழிலாளர் தலைவர் பேசி இருக்கிறார். சினிமா படத்திற்கு பரிசு தரும் விழாவில் முதல்வர் பேசுகிறார். தொழிலாளர் விழாவில் பேசவில்லை என்று பேசி இருக்கிறார்.

பேசியவரும், அவருக்கு ஆமாம் போட்டவரும் இவைகளைப் பார்க்க வேண்டும்.

இங்கே ஒரு படத்தை என்னிடம் காட்டினார்கள் என் கையில் புல் பின்னால் ஆடு அதன் பின்னால் ஒரு புலி சாட்டையோடு ஒருவர்.

இதன் பொருள்எனக்குப் புரியவில்லை ஆடு என்பதை எஸ் ஜி ஒன்று குறிப்பிட்டு இருக்கிறார்கள்,

பாவம் அந்த ஆட்டின் முகத்தைசரியாகப் போடக் கூடாதா? நயின் முகம் போல வரைந்து இருக்கிறார்கள்

சர்க்கசில் சாட்டையை வைத்து கொண்டு புலி கரடி, சிங்கம் முதலிய மிருகங்களை ஆட்டுவிப்பார்கள்

அதே புலி அவர்களைஎன்றாவது ஒருநாள் அடித்துக் கொன்றுவிடும் என்றுபடித்திருக்கிறோம்.

சாட்டையை கையில் வைத்துக் கொண்டு எத்தனை நாள் கட்சி நடத்த முடியும்? எத்தனை நாட்களுக்குத்தலைவராகஇருக்க முடியும்?

சங்கத்தை நடத்துபவர்கள் சங்க உறுப்பினர்களை மிருகமாக ஆக்கக்கூடாது. மிருக உணர்ச்சிக்கும் அடிமையாகக் கூடாது. அய்யாவின் படத்தைதிறக்க எனக்கு உரிமை இல்லை என்று சொன்னார்களை சங்கத்தில் இருப்பவர்களை மிருகங்களாக ஆட்டிப் படைக்கும் செயல் நாட்டுக்கு நல்லது அல்ல அப்படிப்பட்ட சங்கம் எத்தனை நாட்களுக்கு இருக்கும்.

தன்மானம் வேண்டும் என்று அய்யா சொன்னார் இவர்களுக்கு தன்மானம் என்பதன் உண்மை பொருள் புரியுமா?

### மிரட்டுவதா?

ஆட்சியிடம் மிரட்டி காரியம் சாதித்துக் கொள்ள கட்டாயப்படுத்த- அரசை அடிமைப்படுத்த நினைப்பவர்கள் பரிதாபத்துக்குரியவர்கள்.

இந்த அரசுக்கும் எம். ஜி ராமச்சந்திரனுக்கும், அந்த வகையில் தெரியாது என்றாலும் ஒரு நாட்டின் அரசாட்சி எப்படி இருக்க வேண்டும் என்பதைப்பற்றி ஓரளவு தெரியும்.

அந்தவகையில் தான் 2 ஆண்டுகள் தாக்குபிடித்து இருக்கிறோம்.

அவர்கள் நடத்துவது தொடர்கிறது தொடரப் போகிறது அந்த தொடர்கதை எங்காவது இழை அறும் அந்தத் தொடர்கதை தொடராக் கதையாக ஆகும்.

எழுத்துவேலை செய்பவர்களும் தொழிலாளர்கள் தான்நாட்டுக்குப்பயன்பட உழைப்பவர்கள் அத்தனைபேர்களும் தொழிலாளர்கள் தான்.

மே தினத்தன்று தமிழகம் முழுவதிலும் விழாக் கோலம் பூணவேண்டும் எங்கும் வண்ணக் கொடிகள் இருக்க வேண்டும் பாகுபாடுஇன்றி ஒருமை உணர்ச்சியுடன் கொண்டாடவேண்டும்

அந்த நாளில் இப்படிப்பட்ட பிரச்சினைகளைப்பற்றி பேசுவது மே தினத்துக்கு துரோகமாகும் தொழிலாளிகளுக்கு துரோகமாகும்.

அடுத்த ஆண்டுமேதினம் தமிழகம் முழுவதும் சிறப்பாகக் கொண்டாடப்பட வேண்டும்.

கோரிக்கைகளை வைக்கவில்லை என்று முத்தானந்தம் இங்கே குறிப்பிட்டார் அழுத பிள்ளைதான் பால் குடிக்கும் என்பார்கள்.

குழந்தை அழுமுன்பே பால் தரும் தாயும் உண்டு. அப்படிப்பட்ட தாயுள்ளத்துடன் தமிழக அரசு இருக்கிறது.

செப்டம்பர் மாதத்தில் அய்யாவின் நூற்றாண்டு விழா சென்னையில் நடைபெற இருக்கிறது ஒரு வாரம் அந்த நிறைவுவிழா நடக்கும்

அந்த விழா வாரத்தில் உங்களுக்கு மகிழ்ச்சி தரும் செய்தியை தமிழக அரசு அறிவிக்கும்

நீங்கள் கேட்காமலேயே அவைகளை அறிவிப்போம்.

சட்டமன்றக் கூட்டம் முடிந்து இப்போதுதான் மூச்சுவிட நேரம் இருக்கிறது சட்டமன்றத்தில் என்னென்னபேசப்பட்டது என்று பார்க்க வேண்டும்

ஆகவே செப்டம்பர் 15-ம் தேதி பெரியார் விழாவில் அறிவிக்க இருக்கிறோம்.

ஆக்கப் பொறுத்தவர்கள் ஆறப் பொறுக்க வேண்டும் இன்னும் 2- 3 மாதங்கள் தான் இருக்கின்றன.

செப்டம்பர் 15ல் நடைபெறும் அந்த வாரத்தில் நல்ல அறிவிப்புக்களை உங்களுக்காக வெளியிடுவோம் அது உங்களுக்கு மகிழ்ச்சியையும் மன நிறைவையும் உண்டாக்கும்.

இவ்வாறு புரட்சித்தலைவர் பேசினார்.

### சவுந்தர பாண்டியன்

அமைச்சர் சவுந்தரபாண்டியன்பேசியதாவது:

புரட்சித்தலைவர் பாதம் பட்ட இந்த இடம் புனித பூமியாகிறது புரட்சித் தலைவரை இங்கேஅழைத்து வந்து முதல்படியையே வெற்றிப்படியாக ஆக்கி இருக்கிறீர்கள்

இந்த சங்கம்புதிய வரலாற்றை உருவாக்கும்

இவ்வாறுஅமைச்சர் சவுந்தரபாண்டியன் கூறினார்.

### பொன்னையன்!

விழாவில் அமைச்சர் பொன்னையன் பேசியதாவது:

1972-ம் ஆண்டில் இருந்து தமிழக நிர்வாகத்தில் தூய்மை மலர வேண்டும் தமிழ் தாய் மகிழ வேண்டும் என்று புரட்சித் தலைவர் போராட்டம் துவங்கினார்

அந்த சத்திய சோதனைப் போராட்டம் 1977ல் வெற்றிக்கனியை ஈட்டித் தந்தது

தமிழ்தாய்மீது இருந்த களங்கம் நீக்கப்பட்டது. நிர்வாகத்தில் தூய்மை ஏற்பட தடைக்கற்களாக இருப்பவர்கள் மீது புரட்சித் தலைவர் நடவடிக்கை எடுத்து வருகிறார்.

ஏழை எளிய மக்களைப் பாதுகாக்கவே புரட்சித் தலைவர் ஆட்சி இருக்கிறது

இந்தஅரசைப்பொறுத்தவரை பேச்சுவார்த்தை மூலமே எந்த சிக்கலான பிரச்சனையையும் தீர்க்க முடியும் என்று நம்புகிறது.

எந்த தார்மீக கோரிக்கைக்கும் புரட்சித்தலைவர் செவி சாய்ப்பார். கேட்காமலேயே தரும் உள்ளம் படைத்தவர் முதல்வராக இருக்கிறார்.

இவ்வாறு அமைச்சர் பொன்னையன் கூறினார்.

## துரோகச் செயல்

(முதல் பக்கத் தொடர்ச்சி)

தாக நினைத்துக் கொள்ள வேண்டும்" என்று கூறிய நாராயணசாமி நாயுடு தான், விவசாயிகளைப் போராடத் தூண்டியிருக்கிறார்.

'பந்த்' நடக்கும் நாளில் மரத்தைவெட்டி சாலையின் குறுக்கே போட்டு போக்குவரத்தைத் தடுங்கள் பாலத்திற்கு வெடிவையுங்கள், பஸ்களைக் கொளுத்துங்கள், போலீஸ்காரர்களைத் தாக்குங்கள், கூட்டுறவு வங்கிகளைத் தாக்கி, ஈடுவைக்கப்பட்டுள்ள நகைகளைச் சூறையாடுங்கள், பால் வண்டிகளைத் தடுத்து பாலைக் கீழே கொட்டுங்கள், பெண்களை முதலில் நிறுத்திப் போராடுங்கள் என்பதுதான் நாராயணசாமி நாயுடு விவசாயிகளுக்கு இட்ட கட்டளைகள், இப்படிப்பட்ட கட்டளைகளை நல்ல குடிமகன்யாராவதுஇடுவார்களா? நாட்டுப்பற்றுஉள்ள தலைவர்கள் இத்தகைய இழிசெயல்களைச் செய்யத் தூண்டுவார்களா? வீரமுள்ள ஆண்மகனாய் இருந்தால் பெண்களை முதல் வரிசையில் நிறுத்திமுற்றுகைப் போராட்டம் நடத்தும்படி கட்டளைகளை இட்டிருப்பாரா?

### கருணாநிதி பேசும் நியாயம்

நாராயணசாமி நாயுடு ஒரு 'நக்சலைட்' என்று கூறிய அதே கருணாநிதி தான் இன்று நாராயணசாமி நாயுடு வைக்கைது செய்ததற்காக நியாயம் பேசுகிறார் தன் சொந்த பத்திரிகை முரசொலியில் பக்கம் பக்கமாகஎழுதித்தீர்க்கிறார் அன்றுமின்சாரக்கட்டணத்தில் ஒரு பைசாவைக் குறைக்க வேண்டும் என்று இதே நாராயணசாமி நாயுடு போராட்டம் துவங்கியபோது, திருப்பூர் அருகில் 20 பேர்களைச் சுட்டுக் கொன்ற கருணாநிதிதான் இன்று நாராயணசாமி நாயுடுவுக்காக நியாயம் பேசுகிறார், கடமையைச் செய்த சப் இன்ஸ்பெக்டர் கொல்லப் படுவதற்குக் காரணமாய் இருந்த நாராயணசாமி நாயுடுவைக் கைதுசெய்தது நியாயம் இல்லை என்று கருணாநிதி சொல்வது சரிதானா?

"தி. மு. க, ஆட்சிக் காலத்தில் விவசாயிகளுக்கு அளிக்காத சலுகைகளை இந்தஅரசுஅறிவித்துள்ளது

விவசாயிகள் உற்பத்தி செய்யும் விளைபொருள்களுக்குக்கட்டுப்படியாகும் விலை நிர்ணயிக்கும் அதிகாரம்மத்தியஅரசிடம் உள்ளது கோதுமைக்கு மட்டும் சாகுபடிசெலவுக்கு ஏற்ற கட்டுப்படியாகும் விலையை நிர்ணயித்துள்ள மத்திய அரசு நெல்லுக்கு சாகுபடிச் செலவுக்கு ஏற்ற கட்டுப்படியாகும் விலையை நிர்ணயிக்காவிட்டால் தமிழக அமைச்சர்களே உண்ணாவிரதம் இருக்கும் நிலை ஏற்படும் என்று பொதுக் கூட்டங்களிலும், சட்டமன்றப் பேரவையிலும் கூறியுள்ளேன். அமைச்சராக இருந்துகொண்டு உண்ணாவிரதம் இருப்பதை மத்திய அரசு அனுமதிக்கா விட்டால், மந்திரி பதவியை ராஜினாமா செய்துவிட்டு விவசாயிகளுடன் போராடத் தயாராக உள்ளேன் என்றும் முன்பே அறிவித்துள்ளேன். நானும் ஒரு விவசாயிதான். எனக்கும் விவசாயிகளின் பிரச்சினை நன்கு தெரியும். ஆகவே தவறான பிரச்சாரத்தின் மூலம் வன்முறையில் ஈடுபடுத்துவதற்கு விவசாயிகளை யார் அழைத்துச் சென்றாலும் அதை உழவர் நலம் காக்கும் அரசாக உள்ள புரட்சித் தலைவர் அரசு அனுமதிக்காது.

இன்னும் ஒருவார காலத்தில் உயர்மட்டக் குழுவின் அறிக்கைஅரசுக்கு வரும் என்றுஎதிர்பார்க்கப்படுகிறது. அந்த அறிக்கை வந்தபின் விவசாயிகளுக்கு அளிக்கவேண்டிய சலுகைகளைப் புரட்சித்தலைவர் அவர்கள் அறிவிப்பார்

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு தெரிவித்தார்.

### புரட்சித்தலைவர் விளக்கம்

(1ம் பக்கத் தொடர்ச்சி)

சங்கங்கள் ஏற்படுகின்றன. அனைத்திந்திய அண்ணா திமுகழக யூனியன் தோன்றவது தனிப்பட்ட யாருக்கும்விரோதி அல்ல கருத்து வேறுபாட்டால்தான் ஏற்படுகிறது

இந்தக்கருத்துவேறுபாடு தவிர்க்க முடியாத ஒன்றாகும்

தொழிலாளர்களே தொழிற்சங்கத் தலைவராக வரவேண்டும் என்று நான் சொன்னகருத்தைதொழிற் சங்கத்தலைவர் ஆனந்தன் வரவேற்றார் அதற்குநன்றி தெரிவித்துக் கொள்கிறேன்

இந்தக் கருத்து சில இடங்களில் நடைபெற்று வருகிறது.

நான் முதல்வராக வந்த பிறகு தான் இந்தக் கருத்தைச் சொல்வதாக கருத வேண்டாம்.

பல ஆண்டுகட்கு முன்பே 20 ஆண்டு கட்கு முன்பிருந்தே சொல்லி வருகிறேன்

நான் அமெரிக்காசென்ற போது பல்லவன்சங்கத்தில் தொழிலாளரை தலைவராக அமர்த்திவிட்டு சென்றேன்

என்னைக் குடும்பத் தலைவன்-உடன் பிறந்தவர்களை வாழவைப்பவன் என்றார்கள்

இது என் தாயாரிடம் இருந்து எனக்கு வந்திருக்கிறது.

யானைக்கவுனியில் 147ம் எண்ணுள்ள வீட்டில் நாங்கள் குடி இருந்தோம் அப்போது வேலை தேடி நாங்கள் அலைந்த நேரம்

எங்கள் வீட்டுக்குப் பின்னால் குடிஇருந்த ஒரு குடும்பத்திற்கு வியாபாரம் செய்ய என் தாயார் பட்டாணியனிடம் கடன் வாங்கிக் கொடுத்தார் இது எங்களுக்குத் தெரியாது

ஒருநாள் நான் வீடு திரும்பியபோது அந்தப் பட்டாணி சத்தம்போட்டு கொண்டு இருந்தார்.

என் தாயார் தன் கை காப்பைக் கழற்றி அவரிடம் கொடுத்து அதை விற்று எடுத்துக்கொள்ளச் சொன்னார்.

என் தாயிடம் இருந்த அந்தக் குணம் என்னைப் பற்றி இருக்கிறது.

பிடிவாதம் நல்லதிற்கு இருக்கவேண்டும் தீமைக்கு இருக்கக் கூடாது.

இது நாட்டுக்கு நன்மையாக முடிந்தது.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

### ராகவானந்தம் நன்றி உரை

அமைச்சர் ராகவானந்தம் நன்றி தெரிவித்துப் பேசுகையில் புரட்சித் தலைவர்தோன்றாமல் இருந்தால் ராகவானந்தம் முகவரியே இல்லாமல் ஆகிஇருப்பான்

வீழ்ந்தோரை வாழ வைக்கும் புரட்சித்தலைவருக்கு என் குடும்ப நன்றி அவரது காலடியில் வைக்கிறேன் என்றார்.









தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275 அவ்வை சண்முகம்சாலை சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி. தங்கராஜன் நவசக்தி அச்சகம் கச்சேரி சாலை சென்னை-600004. ஆசிரியர்: எம். ஜி. சக்ரபாணி

## கோடம்பாக்கம் பேரூராட்சி சிவலிங்கபுரத்தில் காளிமுத்து பேசுகிறார்

சென்னை, மே. 3- கோடம்பாக்கம் பேரூராட்சியைச் சேர்ந்த கே. கே. நகர் சிவலிங்கபுரம் 83வது தெருவில் இன்று (3-ந்தேதி வியாழன்) பிரும்மாண்டமான கழகப் பொதுக்கூட்டம் நடக்கிறது.

எம்.ஏழுமலை தலைமையில் அமைச்சர் காளிமுத்து அப்துல்ரசாக் எம் எல் ஏ, பீ ராமபத்திரன், ஏ.இ செல்லையா, வழக்கறிஞர் ராமகிருஷ்ணபாபு, செல்வி சந்திரா, சைதை தமிழ்ச்செல்வன், சைதை துரைசாமி, எஸ். எம். துரையரசன் மு. பச்சையப்பன் மற்றும்பலர் பேசுகின்றனர்.

## அண்ணா விவசாயத் தொழிற்சங்க ஒன்றியக் கூட்டம்

குடவாசல், மே: 3- தஞ்சை மாவட்டம் தாகை நாடாளுமன்ற அண்ணா விவசாய தொழிற் சங்க குடவாசல் ஒன்றியக் கூட்டம் நாகை நாடாளுமன்ற அண்ணா விவசாய தொழிற் சங்க செயலர் சேவிக, பாலன் தலைமையில் குடவாசல் திருக்குளம் தென் கரை 8ம் எண் கட்டிடத்தில் 6-5-79 அன்று நடைபெறவுள்ளது அண்ணா தொழிற்சங்க அமைப்பாளர்கள் கலந்துகொள்ள கேட்டுக் கொள்ளப்பட்டு இருக்கிறார்கள்.

## அரசுக்கு சுகாதார ஆய்வாளர்கள் நன்றி

சென்னை, மே, 3. அரசு ஊழியர்களின் ஒய்வு பெறும் வயதை 58 ஆகஉயர்த்தியதற்கும் அகவிலை படியை உயர்த்தியதற்கும் ஒய்வுப் பெறும்போது ஒய்வுக்கால ஊதியத்தை ஒட்டன்பெறும் வகையில் உத்தரவிட்டதற்கும் அரசுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறோம் என்று தமிழ்நாடு சுகாதார ஆய்வாளர்கள் சங்கம், வடாற்காடு மையம் செயலாளர் அரங்கநாதன் பாராட்டு தெரிவித்துள்ளார்.

## முகவரி மாற்றம்

வழக்கறிஞர் பி நடராஜன் தொகுதி அமைப்பாளர் பூவிருந்தவல்லி, சாந்தி இல்லம். சிப்பாய் லேன், கரையாஞ்சாவடி, சென்னை 600 056.

## மறைவு

சென்னிமலை கழகத் தோழர் சி. தங்கமுத்துவின் தந்தை மு. சென்னிமலைக் கவுண்டர் கடந்த 25ந்தேதி காலை 10 மணிக்கு மரணமடைந்தார். இறுதி சடங்கில் ஏராளமான கழகத் தோழர்கள் கலந்துகொண்டனர்.

மாநில அரசின் வருவாயைத் தடுக்க முயற்சிப்பதா?

# மாநில உரிமையை காக்க போராட தயங்க மாட்டோம்

அமைச்சர் எஸ். டி. எஸ். பேச்சு

சென்னை. மே 3. "மாநில அரசின் வருவாயை தடுக்க மத்திய அரசு முயற்சிக்கிறது. மாநில அரசின் உரிமையைக் காக்க, போராடத் தயங்க மாட்டோம்" என்று அமைச்சர் எஸ் டி எஸ் சட்டசபையில் தெரிவித்தார்.

இதுபற்றி தமிழக வருவாய்த்துறை அமைச்சர் எஸ். டி. எஸ். சட்டசபையில் கூறியதாவது:

ஏற்றுமதி செய்யப்படக் கூடிய பொருள்களின் மீது மாநில அரசுகள் "விற்பனை வரி" "வாங்கும் வரி" விதிப்பதை கட்டுப்படுத்தும் நோக்குடன் இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தினை திருத்த இந்திய அரசின் வணிக அமைச்சகம் கோரியுள்ளதாக இந்தப் பேரவைக்கு தெரியவருகிறது.

மேற்கூறிய கோரிக்கைக்கு இணங்க அரசியல் அமைப்பு சட்டம் திருத்தப்பட்டால், மாநில அரசின் வருவாய் அளவும், கூட்டாட்சிநிதியமைப்பின் கீழ் உள்ள மாநில அரசுகளின் வரி விதிக்கும் அதிகார வரம்பும் பெருமளவுக்கு பாதிக்கப்படும்.

அதனால் இப்பேரவை இதுகுறித்து ஆழ்ந்தகவலையினைத் தெரிவிப்பதோடு, இந்திய அரசின் வணிக அமைச்சகம் கோரியுள்ள அரசியலமைப்பு சட்டத் திருத்தத்தினை மேற்கொள்ள வேண்டாம என்று இந்திய அரசினை வற்புறுத்திக் கேட்டுக் கொள்கிறது.

இவ்வாறு அமைச்சர் எஸ். டி. எஸ், சட்டசபையில் ஒரு தீர்மானத்தை கொண்டு வந்தார் இந்தத் தீர்மானத்தை ஜனதா கட்சியைத் தவிர மற்ற எல்லா கட்சியினரும் சட்டசபையில் வரவேற்று பேசினார்கள்,

இதற்கு பதிலளித்து அமைச்சர் எஸ், டி. எஸ். பேசியதாவது:

சட்ட திருத்தத்தை ஆயுதம்போல மத்திய அரசு கொண்டு வந்திருக்கிறது இதை நாம் கண்டிக்காவிட்டால் தொடர்ந்து இதுபோன்ற சட்டங்களை மத்திய அரசு கொண்டு வரும். அதன் காரணமாகத்தான் தமிழக அரசு இந்த தனித் தீர்மானத்தைக் கொண்டு வந்துள்ளது.

இந்த மாநிலம் எல்லாவற்றுக்கும் மத்திய அரசை எதிர்நோக்க வேண்டியுள்ளது.

உரிமைகளைப் பெறுவதற்காக மத்திய அரசை எதிர்த்துப் போராட வேண்டும் என்று உறுப்பினர்கள் பேசினார்கள் தமிழக அரசு தன் உரிமைகளை விட்டுக்கொடுக்காது. உரிமைகள் பறிக்கப்படுமானால் அதை எதிர்த்துப் போராடுவதற்கு இந்த அரசு என்றும் தயங்காது.

நகரசபைகளுக்குஇருக்கும் அதிகாரம் தான் மாநில அரசுகளுக்கு இருக்கிறது மாநிலங்கள் மேலும் அதிகாரம் பெற வேண்டும்.

இவ்வாறு அமைச்சர்



எஸ் டி எஸ் பேசினார்.

அமைச்சரின் பதிலுக்குப்பின் தீர்மானம் நிறைவேறியது.



## கடலூரில் பாவேந்தர் விழா

கடலூர், மே: 3- பாவேந்தர் பாரதிதாசன் பிறந்த நாள் விழா கடலூர் மஞ்சை நகர் திடலில் தமிழக அரசின் சார்பில் கொண்டாடப்பட்டது.

பண்ருட்டி ராமச்சந்திரன் தலைமையில் பாரதிதாசனின் துணைவியாரும் அவரது மகன் மன்னர் மன்னனும் விழாவில் கலந்து கொண்டனர். அமைச்சர் பண்ருட்டிராமசந்திரன் பாரதிதாசனின் துணைவியாருக்கு பட்டாடை வழங்கினர். மகன் மன்னர் மன்னனுக்கு பொன்னாடை போர்த்தினர்.

# கூட்டுறவுத்துறைஊழலை ஒழிக்க சட்டத் திருத்தம்: அமைச்சர்கே.ஏ.கே.தகவல்

சென்னை. மே. 3. தமிழ்நாடு கூட்டுறவு சட்டங்களில் 31 புதிய விதிகளை இணைத்து சட்டத் திருத்தம் விரைவில வருகிறது. அது பொறுக்குக் குழுவின் பரிசீலனையில் இருக்கிறது என்று கூட்டுறவுத்துறை அமைச்சர் கே. ஏ கே. மேலவையில் தெரிவித்தார்,

கூட்டுறவு சட்டத்திருத்த சட்டமுன்வடிவுகளின் மீது மேலவையில் நடந்த விவாதத்திற்கு பதில் அளித்து கூட்டுறவுத் துறை அமைச்சர் கே ஏ கே கூறியதாவது:-

1976 ம் ஆண்டு ஜூன் மாதம் 10 ம் தேதி அன்று குடியரசுத்தலைவர் ஆட்சியில் தனி அதிகாரிகள் நியமிக்கப்பட்டார்கள் அவர்களுடையபதவிக்காலத்தை 6 மாதத்திற்கு நீடிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது.

"அடங்கல் திருத்தங்கள்" கொண்ட சட்டத்திருத்த முன் முடிவு கொண்டு வரப்பட்டது. அது பொறுக்குக் குழுவின் பரிசிலனையில் இருக்கிறது, பொறுக்குக் குழுவின் ஆய்வுக்குப் பிறகு அது சட்டமாக வரும். அதன்மூலம் ஒரு நல்ல திருத்தத்தை கூட்டுறவுத் துறையிலே ஏற்படுத்த முடியும்.

1961ம் ஆண்டுக்குப் பிறகு கடந்த 18 ஆண்டுகளில பொறுப்பிலிருந்தவர்களால்அவ்வப்போது ஏற்பட்ட அவசியத்திற்கு ஏற்ப அவ்வப்போது பல ஷரத்துகள் திருத்தப்பட்டன.

1979 ஆண்டு நடைமுறைக்கு ஏற்பவேறு சில அம்சங்களையும் சேர்த்து அடங்கல் மசோதா (காம்பரஹென்சிவ்பில்) கொண்டு வரப்பட்டிருக்கிறது

1947ம் ஆண்டில்இருந்து கடந்த 31 ஆண்டுகளில் கூட்டுறவு இயக்கம் வளர்ந்திருக்கிறது ஆனால் வளர வேண்டிய அளவுக்கு வளரவில்லை எந்த நோக்கத்திற்காகஆரம்பிக்கப்பட்டதோ அதன் படி செயல்படவில்லை. அதற்குக் காரணம் அரசியல் குறுக்கீடுகள்.

கூட்டுறவு ஒன்றின் மூலம்



தான் ஏழை எளியவர்களை வாழ வைக்க முடியும், சந்தானம் கமிட்டி, வர்கீஸ் கமிட்டி அறிக்கைகளின் அடிப்படையிலும் கடந்த 22 மாதங்களில் ஏற்பட்ட அனுபவங்களின் அடிப்படையிலும் சட்டத்திருத்தம் கொண்டு வரப்பட்டிருக்கிறது

சட்டத்திருத்தங்களை செய்யாமல் கூட்டுறவு அமைப்புகளுக்கு தேர்தல் நடத்துவது 'பழைய கள் புதிய மொந்தையில்' என்றநிலைதான் இருக்கும்.

ஏற்கனவே 122 விதிகள் தான் இருந்தன. புதிய மசோதாவில் 153 விதிகள் இருக்கின்றன, பணியாளர் நியமனம் செய்ய சரியான விதிமுறைகள் இல்லை. இதனால் தகுதியற்றவர்கள் எல்லாம் கூட்டுறவு இயக்கத்தில் நியமிக்கப்பட்டார்கள். இப்பொழுது இதற்கும்விதிகள் வகுக்கப்படுகின்றன.

இப்பொழுது கொண்டு வருவதுதான் இறுதிச்சட்டம்என்று ஆகாது கூட்டுறவு உலகவரலாற்றிலே 138 ஆண்டுகள் ஆகின்றன இதில் 5 ஆயிரம் சட்டங்கள் இருக்கின்றன இந்தியாவிலும் தமிழ்நாட்டிலும் கூட்டுறவுதுவக்கப்பட்டு 75 ஆண்டுகள் ஆகின்றன

இந்தத் துறையில் பிரச்சனைகள் இருப்பதாகக் கூறினார்கள் வளர்ச்சி பிரச்சினைகளை உருவாக்கும் (குரோத் கிரியேட்ஸ் பிராப்ளம்) என்று மார்க்சியதத்துவத்தில் கூறப்பட்டிருக்கிறது இந்த துறையில் பிரச்சினைகள் இருக்கின்றன என்றால் இத்துறை வளருகிறது என்று பொருள்

அதிகாரிகள், பொறுப்பில் இருந்தவர்கள் எதிர்காலத்திலே பொறுப்புக்கு வர இருப்பவர்கள் இவர்களில் யாராகிலும்சரி தவறு செய்தால் குற்றங்கள் என்றால் ஆதாரம் அடிப்படை இருந்தால்நடவடிக்கைகளை நிச்சயம் இந்த அரசு எடுக்கும்

இவ்வாறு அமைச்சர் கே ஏ கே பேசினார்.

★ வேலைக்காக உணவு திட்டத்தின் கீழ் இந்த ஆண்டில் ரூ. 40 கோடி வேலைகள் நடக்கும்

★ தொழிலாளர்களுக்கு கோதுமை இல்லாமல் அரிசி மட்டுமே தரக்கோரியும்

# டெல்லி பதில் தரவில்லை



அமைச்சர் காளிமுத்து அறிவிப்பு

சென்னை, மே 3. வேலைக்காக உணவு திட்டத்தின் கீழ் ரூ. 40 கோடி மதிப்புள்ள வேலைகளை இந்த ஆண்டு முடிக்க தமிழக அரசு முடிவு செய்துள்ளது. தொழிலாளர்களுக்கு முழு அளவில் அரிசியே வழங்கவேண்டும் என்ற கோரிக்கையை மத்திய அரசு ஏற்கவில்லைஎன்று அமைச்சர் காளிமுத்து அறிவித்துள்ளார்

உள்ளாட்சித்துறை அமைச்சர் காளிமுத்து விடுத்துள்ள அறிக்கையில் கூறி இருப்பதாவது:

மத்திய அரசு செயல்படுத்திவரும் 'வேலைக்காக உணவு' திட்டத்தின்கீழ் தமிழக அரசு பங்கு கொள்ள திட்டம் வகுத்து தீவிர நடவடிக்கைகள்மேற்கொண்டுள்ள நிலையை விளக்க அரசு விரும்புகிறது இத்திட்டம் 1976-77ல மத்திய அரசினால் தொடங்கப்பட்டது. தொடக்கக் கட்டத்தில் இத்திட்டத்தின் கீழ் கோதுமையை மட்டுமே வழங்குவதாக மத்திய அரசு கொள்கை முடிவை எடுத்திருந்தது.

கோதுமையைப் பயன்படுத்தி இத்திட்டத்தைத் தமிழகத்தில் செயல்படுத்துவதற்கான வாய்ப்புக் கூறுகள் அதிகம் இல்லையென்று எடுத்துக்காட்டி இத்திட்டத்தின் கீழ் அரிசியை வழங்குவதற்கு வகைசெய்யவேண்டுமென்று மத்திய அரசிடம் இந்த அரசு வற்புறுத்திவந்தது தமிழக அரசின் வற்புறுத்தலின்பேரில் இத்திட்டத்தின்கீழ் பாதி அளவு அரிசியாகவும் பாதி அளவு கோதுமையாகவும் வழங்கலாம் என்று 1978 நவம்பர் திங்களில் மத்திய அரசு அறிவித்தது.

இத்திட்டத்தின் கீழ் வழங்கப்படும் உணவுதானியத்திற்கு அரிசியைமுழுமையாகத் தர வகை செய்ய வேண்டுமென்று வற்புறுத்தி தமிழக முதல்வர் பாரதப் பிரதமருக்கு 1978 மார்ச்சு இறுதியில் நேர்முகக் கடிதம் எழுதினார்.

இந்த க்கோரிக்கையை வற்புறுத்திக்கொண்டிருந்த நேரத்திலேயே,பாதியளவு தான் அரிசியை வழங்குவதற்குத்திட்டத்தில்இடம் இருந்தபோதிலும், திட்டத்தின் நன்மைகள் தமிழகமக்களுக்குகிடைக்க வேண்டுமென்ற கவலையில்

(4ம் பக்கம் பார்க்க)

## நெய்வேலியில் தீ விபத்து: கழகத் தோழர்கள் உதவி

நெய்வேலி, மே. 3. நெய்வேலியில் தீவிபத்து ஏற்பட்டு 18 வீடுகளுக்கு மேல் தீக்கிரையாயின. பாதிக்கப்பட்ட மக்களுக்கு கழகத் தோழர்கள் உதவிகள் செய்தனர்.

நெய்வேலி எல்லைக் குப்பட்ட கங்கை கொண்டான் கிராமத்தின் அருகே இலங்கை வாழ் தமிழர்களின் குடியிருப்புகள் உள்ளன, அந்த குடியிருப்புகளில் தீவிபத்து ஏற்பட்டு 18 வீடுகளுக்கு மேல் தீக்கிரையாயின.

செய்தியறிந்தவுடன் மாவட்ட கழக அமைப்பாளர் கரிகாலன் அண்ணா தொழிற்சங்க அமைப்பாளர் அனைத்து கழகத் தோழர்கள் பலரும் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவிகள் செய்தனர்.

## ஏழுகிணறு

6-5-79 ஞாயிறு மாலை 7 மணிக்கு சென்னை 11வது வட்டம் ஏழுகிணறு பூங்கா அருகே அம்சாமோகன் ராஜ் தலைமையில் பேசுவோர் திருப்பூர் மணிமாறன் எம் எல் ஏ, பா, வளர்மதி. மு பாண்டியன். இ மதுசூதனன், தஞ்சை தமிழழகன், ராஜேஸ்வரி டி சகுந்தலா: ஆண்டாள் ரஹத், கஸ்தூரிபாலன், ஏ வி கிருஷ்ணமூர்த்தி. உபகாரமேரி, லட்சுமி வத்சலா மற்றும் பலர்.

## ஈரோடு

13-5-79 ஞாயிறு காலை 7 மணிக்கு அண்ணா நினைவு மாநில குதிரை, மாடு ரேக்ளா எல்லை போட்டி துவக்கிவைத்துபேசுவோர்; சு. முத்துசாமி எம் எல் ஏ, ஈரோடு அழகரசன் வஜ்ரவேல், ஜெகந்நாதன், இரா மணி, சோமசுந்தரம் ஆறுமுகம், பாலு மற்றும் பலர்.

# கழகத் தொழிலாளர் நடத்திய மே தின விழா சிறப்பு

சென்னை, மே. 3. சென்னை வடபழனி சிங்காரவேலர் திடலில் சென்னை செங்கை மாவட்ட அண்ணாதொழிற் சங்கப் பேரவை, இணைப்பு சங்கங்களின் சார்பில் மே தின விழா நடைபெற்றது.

மேதினவிழா கூட்டத்திற்கு கழக தொழிற்சங்கப் பிரிவுச் செயலாளர் வை. பெருமாள் தலைமை வகித்தார்.

கூட்டத்தில் கழகப் பொதுச்செயலாளர் டாக்டர் நாவலர் அமைச்சர் ராகவானந்தம் ராமபத்திரன். ராம கிருஷ்ணபாபு, பேரவை ராஜேந்திரன், ஜெ.பாலன் பெட்ரோ நடராஜன், மதுசூதனன், கதிர் சோமசுந்தரம், சி. வி. அன்புத்தம்பி, கு, க, செல்வம், தி. நசர் மூர்த்தி, ஏ. பி. வரதராசன், ஆண்டாள் ரஹத், டி. சகுந்தலா தரங்கை கண்ணன், ஏ. தாஸ், தெய்வசிகாமணி, வி. ராஜ்குமார், கிருஷ்ணமூர்த்தி, துரைராசன் கோபா அமிர்தம், தட்சிணாமூர்த்தி சோமசுந்தரம், து மதிவாணன், ராமலிங்கம் பி.ஆர், லட்சுமிபதி நாகராசன், மாரிமுத்து சீனிவாசன் ஆகியோர் பேசினர்.

சிங்காரவேலா திடலிலிருந்து 3 மைல் தூரத்திற்கு கழகக்கொடிகளாலும் தொழிற்சங்க கொடிகளாலும் தோரணங்கள் கட்டியிருந்தனர்.

கூட்டமேடையை எம்மதமும் சம்மதம என்பது போல சர்ச், கோயில், மசூதி போன்றவை போல மின்விளக்குகளால் அலங்கரித்திருந்தனர்.

தொழிலாளர்நலன்காக்க பாடுபடும் ஒரே தலைவர் முதல்வர் புரட்சித் தலைவர் தான் என்பதை எடுத்துக் காட்டிடும் வகையில் லட்சோப லட்சம் பேர் கூடியிருந்துமேதின கூட்டத்தை சிறப்பித்தனர்.

தஞ்சை, நாகை நாடாளுமன்ற இடைத் தேர்தல் நடைபெற இருப்பதை யொட்டி கழகத் தேர்தல்நிதியாக இணைப்பு சங்கங்களின் சார்பில் 555 ரூபாயை வை. பெருமாளும் அனைத்து போக்குவரத்து கூட்டமைப்பின் சார்பில் கோபா அமிர்தம் 404 ரூபாயும் கழகப்பொதுச் செயலாளர் டாக்டர் நாவலரிடம் அளித்தனர்.

## 39- வதுவட்டம்

3-5-79 வியாழன் மாலை 6.30 மணிக்கு சென்னை 39-வது வட்டம் கந்த கோட்டம் அருகேயுள்ள ராசப்ப செட்டி தெருவில் இ. எஸ். மொய்தீன் தலைமையில் பேசுவோர்: அமைச்சரின் பேரவைச் செயலர் முசிறிபுத்தன், மணிமாறன் எம். எல். ஏ. எம். எஸ். அப்துல்காதர், வை. பெருமாள், பா. வளர்மதி மற்றும் பலர்.

## திருத்துறைப்பூண்டி

4-5-79 வெள்ளி மாலை 5 மணிக்கு மன்னை சாலையில் புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். மன்றத்திறப்பு விழா நடக்கிறது. ஏ, சாப்பையன் தலைமையில் டாக்டர் நாவலர் துரை கோவிந்தராசன் எம் எல் ஏ என் எஸ் இளங்கோ, பட்டுக்கோட்டை எஸ் பாப்பையன், சு. தென்கோவன், ப.ஜெயக்குமார் துரை ராஜேந்திரன் மற்றும் பலர் பேசுகின்றனர்.

# கழக செய்திகள்

## துறைமுகம்

4-5-79 வெள்ளி மாலை 7 மணிக்கு சென்னை 17-வது வட்டம், அம்மன் கோவில்தெரு,கோவிந்தப்ப நாயக்கன் தெரு சந்திப்பு அருகில் கவி. கே. கபூர் தலைமையில் பேசுவோர்: ஜேப்பியார். அடியார்,சிவி அன்புத்தம்பு, தஞ்சை தமிழழகன் ஏ வி கிருஷ்ணமூர்த்தி, ஆர்.எம்.கண்ணப்ப ராஜேந்திரன் மண்ணடி கிருஷ்ணமூர்த்தி மற்றும் பலர்.

## உறையூர்

4-5-79 வெள்ளிக்கிழமை மாலை 7 மணிக்குதிருத்தாந்தோணி சாலையில் முசிறி மாசிலாமணி தலைமையில் பேசுவோர்: சவுந்தரராசன் எம் எல் ஏ. சி, மாணிக்கம் எம் எல் ஏ. கரு அன்டதாசன், கே தேவதாஸ், டி வி பரமசிவம் ஆர். நல்லுசாமி, ஜி. எஸ். நாதன், பெரியண்ணசாமி அப்ருதீன், ஜி, எஸ், நாதன் மற்றும் பலர்,

## நாகர்கோவில்

4-5-79 வெள்ளி மாலை 7 மணிக்கு நாகர்கோவில் 4-வது வட்டத்தில் உள்ள கிருஷ்ணன்கோயில், வெள்ளாளர் கீழ்த் தெருவில் இரா. சந்திரன் தலைமையில் பேசுவோர்: அமைச்சரின் பேரவைச் செயலர் நாஞ்சில் வின்சென்ட், சி. கிருஷ்ணன் எம். எல். ஏ, தமிழ்மகன் உசேன், மதுரை முத்துராமன், எம். ஜெ. வளன், பி. பாக்கியராஜ், எம். முத்துசாமி, எம். நஜிபுதின் மற்றும் பலர்.

## ஒட்டன் சத்திரம்

5-5-79 சனி மாலை 6 மணிக்கு அண்ணா திடலில் எஸ். பழனிசாமி தலைமையில் பேசுவோர்: பொத்தனூர் மணிமாறன் என். எஸ். வேலு எஸ். ராமலிங்கம், ஏ. பி. தங்கவேலு, எஸ். சாதாசா, ஆர். பி. ராமசாமி, வீ.கே பெருமாள், எஸ். ராமமூர்த்தி, ஆர். சந்தசாமி மற்றும் பலர்.



## நெய்வேலி

6-5-79 ஞாயிறு மாலை 4 மணிக்கு நகர எம் ஜி ஆர் மன்றப் சார்பில் நெய்வேலி 26 வது வட்டம் பள்ளிக்கு அருகே நடக்கும் பொது உறுப்பினர்கள் கூட்டத்தில் அனைவரும் கலந்துகொள்ள வேண்டும் என்று இராஜ மூர்த்திதெரிவித்துள்ளார்

# அண்ணா



## காளிமுத்து

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

66,000 டன் அரிசியை ஒதுக்கீடு செய்யவேண்டுமென்று பிப்ரவரி இறுதியில் இந்த அரசு மத்திய அரசை கேட்டுக்கொண்டது.

1979-80ம் ஆண்டுக்கு இத்திட்டத்தின்கீழ் 66000 டன் அரிசியை ஒதுக்கிடு செய்ய வேண்டுமென்று தமிழக அரசு மத்திய அரசைக் கோரியுள்ளது. முதற் கட்டமாக 20,000 டன் அரிசியை மத்திய அரசு அண்மையில் ஒதுக்கீடு செய்துள்ளது. 66,000 டன் அரிசியும் கிடைக்குமென்ற எதிர்பார்ப்பில், அதைப் பயன்படுத்தி 40 கோடி ரூபாய் மதிப்புள்ள வேலைகளை இந்த ஆண்டிலேயே செய்து முடிக்க விரிவான திட்டம் வகுக்கப்பட்டு ஆணைகளும் பிறப்பிக்கப்பட்டுள்ளன.

கிராம வளர்ச்சித்துறை, பொதுப் பணித்துறை, வனத்துறை, வீட்டுவசதி வாரியம், குடிசை மாற்று வாரியம், குடிநீர் வடிகால் வாரியம் போன்ற பல்வேறு அமைப்புகளையும் இத்திட்டத்தில் ஈடுபடுத்தி, அவர்கள் மேற்கொள்ள வேண்டிய வேலைகளுக்குத் தனித் தனியாக ஒதுக்கீடுகள் செய்யப்பட்டுள்ளன.

இத்திட்டத்தின்கீழ், அரிசியையே முழுமையாக வழங்கவேண்டுமென்ற நம் முடைய கோரிக்கைக்கு, மத்திய அரசிடமிருந்து அதிகாரப்பூர்வமாக இன்னும் பதில் வரவில்லை என்றபோதிலும், அவர்கள் அதை ஏற்றுக்கொள்வார்கள் என்பதற்கான அறிகுறிகள் கிட்டியுள்ளன.

இத்திட்டத்தைத் துரிதமாகச் செயல்படுத்தத் தமிழக அரசு மேற்கொண்டுள்ள நடவடிக்கைகளின் பலனாக கிராமப்புற மக்களின் வேலை வாய்ப்புகள் கணிசமாகப் பெருகுவதுடன் கிராமப் பகுதிகளில் நிலையானவசதிகள் பெருகுவதற்கும் இது வகைசெய்யுமென்று எதிர் பார்க்கலாம்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்.

## கட்டுப்பாடு மீறல்: ஜனதா முதல்வருக்கு மேலிடம் நோட்டீஸ்

புதுடெல்லி, மே. 3-கட்சிக்கட்டுப்பாட்டை மீறியதற்காக ஜனதாக் கட்சியில் பலருக்கு கட்சி மேலிடம் நோட்டீஸ் அனுப்பியுள்ளது.

ஜனதாக்கட்சியின் மத்திய பார்லிமெண்டரி கட்சி கூடியது. அரியானாவில் நர்நால் தொகுதி சட்டசபை இடைத்தேர்தலில் ஜனதா வேட்பாளருக்கு எதிராக வேலை செய்ததற்காக ஏன் நடவடிக்கை எடுக்கக் கூடாது என்பதற்கு சமாதானம் கூறுமாறு அரியானா முதல்வர் தேவிலாலுக்கும் மாநில கட்சித் தலைவர் சந்திராவதிக்கும் நோட்டீஸ் அனுப்ப முடிவு செய்யப்பட்டது.

மத்தியப் பிரதேசம், உத்தரப் பிரதேசம் ஆகிய மாநிலங்களைச் சேர்ந்த சில ஜனதா எம்.எல்.ஏக்கள், கட்சிகொறடாவுக்கு மாறாக ஓட்டு அளித்ததற்காக அவர்களுக்கும் நோட்டீஸ் அனுப்ப முடிவு செய்யப்பட்டது.

கட்சி பொதுச் செயலாளர் ராமகிருஷ்ண ஹெக்டே கூறுகையில் "இனி கட்சியில் பெரியவர்களாக இருந்தாலும் சரி சிறியவர்களாக இருந்தாலும் சரி, யாரும் கட்டுப்பாடுமீற அனுமதிக்கப்படமாட்டார்கள்" என்றார்.

## சூளையில் பண்ருட்டி பேசுகிறார்

சென்னை, மே 3-இம் மாதம் 4 ந்தேதி (வெள்ளிக்கிழமை) இரவு 7 மணிக்கு சென்னை 50-வது வட்டம், சூளை தட்டான் குளம் பகுதி ஆட்டுத்தொட்டி சாலையில் கழகப் பொதுக் கூட்டம் நடக்கிறது.

இரா துரைவேலு தலைமையில், அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன், டாக்டர் ஹண்டே, ரெசந்திரா, இரா துரைராசன், ராசாராம், சின்னதுரை, ஆ. ரங்கன், ஜெ. பூபதி, க. துரைராசன் இரா. கிருஷ்ணசாமி மற்றும் பலர் பேசுகின்றனர்.

## மதுரையில் வீனஸ் சர்க்கஸ்

மதுரை, மே 3-மதுரை அரசரடி ரயில்வே மைதானத்தில் வீனஸ் சர்க்கஸ் துவங்கியது. மேயர் எஸ். முத்து துவக்கி வைத்தார்.

சர்க்கசில் கண்ணைக் கவரும் கவர்ச்சி மிகு காட்சிகள் இடம்பெற்றுள்ளன.

விளக்குகளை அணைத்து விட்டு ஆடும் பார் விளையாட்டுகள் வியப்பில் ஆழ்த்துகின்றன.

அந்தரத்தில் தொங்கும் ஊஞ்சலில் ஆடிக்கொண்டே புருஷோத்தமன் செய்யும் சாகசங்கள் பலத்த கை தட்டலைப்பெறுகின்றன.

வட்டமான மேஜையின் மீது பம்பரமென சுழன்று ஆடும் ஸ்கேட்டிங் விளையாட்டு பார்ப்போரின் பலத்த கைதட்டலைப்பெறுகின்றது குடியின் கொடுமையை விளக்கி இரண்டு யானைகள் நடத்தும் நாடகம் நல்ல நகைச்சுவை.

இதுபோன்ற சிறப்பு அம்சங்களைத் தவிர ஒரு சர்க்கசுக்குத் தேவையான அத்தனை அம்சங்களும் நிறைந்து காணப்படுகின்றன.

வீனஸ் சர்க்கசில் 75 பெண்கள் உள்பட 300 கலைஞர்கள் பணியாற்றுகின்றனர். வழக்கம்போல் சிங்கங்கள், யானைகள், குதிரைகளும் உண்டு.

துவக்க விழாவிற்கு வந்திருந்தோரை வீனஸ் சர்க்கஸ் பங்குதாரர்கள் எம் மூசா, எஸ். வி. லால், நிர்வாகி, பிஸ்வாஸ்; ராஜன் பப்ளிசிட்டீஸ் இ.ம. அண்ணாமலை, ஆகியோர் வரவேற்றனர்.

## திரைப்படத்தில் முத்தக் காட்சி: ஆளுநர் கடும் கண்டனம்

சென்னை, மே 3-தமிழ்ப்பண்பாடு, இந்தியக் கலாச்சாரம் ஆகியவற்றை பரப்பும் வண்ணம் தமிழ்ப் படங்கள் அமையவேண்டும் முத்தக் காட்சிகள் திரைப் படங்களில் இடம் பெறக் கூடாது என்று ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி கருத்து தெரிவித்தார்.

சிறந்த திரைப்படங்கள் கலைஞர்களுக்கான பரிசளிப்பு விழா கலைவாணர் அரங்கில் நடந்தது விழாவிற்கு ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி தலைமை வகித்து பேசியதாவது:-

சினிமா பொதுமக்களோடு தொடர்புக் கொள்ளக்கூடிய ஒரு சக்தி வாய்ந்த சாதனம் ஆகும். பொழுதுபோக்கு அம்சமாக மட்டுமில்லாமல் மக்களுக்கு நல்ல செயல்களை கற்றுக்கொடுப்பதாகவும் சினிமா இருக்க வேண்டும்.

இத்தகைய அடிப்படையில் படங்கள் தயாராக வேண்டும் என்று ஊக்குவிப்பதற்காக தமிழக அரசு பரிசுகள் வழங்குகிறது.

சினிமாவில் வரும் பாடல்கள் மிகவும் மோசமாகவும் இளைஞர்கள் மனதை கெடுக்கக் கூடியதாகவும் இருக்கிறது.

சமுதாயம் இதை இனி மேலும் தாங்கிக் கொண்டு இராது என்பதை படத் தயாரிப்பாளர்கள் உணர வேண்டும் ஏனெனில் பொதுமக்களிடம் ஒருவிழிப் புணர்ச்சி வந்து விட்டது.

முக்கியமான இடங்களில் ஆபாச போஸ்டர்கள் ஒட்டப்பட்டுள்ளன.

கல்வி நிலையங்களுக்கு அருகே இத்தகைய போஸ்டர்கள் இருந்தால் அதைப் பார்க்கின்ற மாணவ மாணவியர் உள்ளம்கெடும்.

தமிழ்ப்பண்பாடு, இந்திய கலாச்சாரம் ஆகியவைகளை பரப்பும் வண்ணம் தமிழ்ப் படங்கள் அமைய வேண்டும் மட்டரகமான உணர்ச்சியைத் தூண்டும் விதத்தில் படங்களை தயாரிக்கக்கூடாது.

குறிப்பாக முத்தக்காட்சிகளை திரைப்படங்களில் காட்டக்கூடாது இளைஞர்களும், இளம்பெண்களும் கெட்டுப் போவதற்கு துணையாக இது இருக்கும்.

இவ்வாறு ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி பேசினார்.

### முதல்வருக்கு வணக்கம்

முதல்வர் புரட்சித்தலைவர் பதக்கங்களை பரிசு பெற்றவர்களுக்கு அணிவித்தார். தயாரிப்பாளர் ராஜ் கண்ணு, டைரக்டர் பாரதிராஜா, கதாசிரியர் குகநாதன், உரையாடல் ஆசிரியர் தூயவன், இசையமைப்பாளர் இளையராஜா, பாடலாசிரியர் புலவர் புலமைப்பித்தன் ஒளிப்பதிவாளர்கள் பாபு, ஏ. சோமசுந்தரம் ரூ1 லட்சம் நிதியுதவிபெற்ற அச்சாணி படத்தயாரிப்பாளரும் டைரக்டருமான காரைக்குடி நாராயணன் ஆகியோர் புரட்சித் தலைவர்



காலில் விழுந்து வணங்கினர்

பலப்பரீட்சை தயாரிப்பாளர் முதல்வர் புரட்சித் தலைவருக்கு மாலை அணிவிக்கவந்தார் புரட்சித் தலைவர் அந்த மாலையோடு பதக்கத்தையும் சேர்த்து அவர் கழுத்தில் அணிவித்து விட்டார் அப்போது பலத்த ஆரவாரம் எழுந்தது.

சிறந்த செய்திப்படத்துக்குரிய பரிசைப் பெற்றுக்கொண்டு சென்றுவிட்ட செய்தித்துறை இயக்குநர் கிருஷ்ணமூர்த்தியை அருகில் அழைத்து நிற்க வைத்து புகைப்படம் எடுக்கச் செய்தார் முதல்வர் புரட்சித்தலைவர்.

தென்னிந்திய திரைப்பட வர்த்தக சபை சார்பில் சித்ரமகால் கிருஷ்ணமூர்த்தி அனைவருக்கும் மாலை அணிவித்தார் தயாரிப்பாளர்கள் கில்டு சார்பில் பி புல்லையா அனைவருக்கும் மாலை அணிவித்தார்.

## மதுரையில் கைத்தறி கண்காட்சி: மேயர் முத்து துவக்கினார்

மதுரை, மே 3- மதுரையில் அகில இந்திய கைத்தறி வெள்ளிவிழாக் கண்காட்சியை மேயர் முத்து துவக்கிவைத்தார்.

கைத்தறி கண்காட்சி துவக்கவிழா மதுரை சேதுபதி மேல்நிலை பள்ளியில் நடைபெற்றது.

விழாவுக்கு மாவட்ட ஆட்சித் தலைவர் பி. சி. சிரியாக் தலைமைவகித்தார்.

மதுரை கைத்தறி மற்றும் துணிநூல் உதவி இயக்குநர் ந. ராமமூர்த்தி வரவேற்றார் கண்காட்சியை துவக்கி வைத்து மேயர் எஸ் முத்து பேசினார்

வேடசந்தூர் சட்டமன்ற உறுப்பினர் எஸ் எம் வாசன், மதுரை மாநகர் மன்ற உறுப்பினர்கள் கே. எம் சின்னு, எஸ் கே பாலகிருஷ்ணன் மற்றும் கே. ஆர் சுந்தரராமன், வி. கே. சுந்தர்ராவ், ஆகியோர் பேசினர்கள்.

முகவை கைத்தறி மற்றும் துணி நூல் உதவி இயக்குநர் காஜா கமாலுதீன் நன்றி கூறினார்.

கோவை எஸ். டி. சேகரின் ராகமாலிகா குழுவினரின் மெல்லிசை நிகழ்ச்சி நடைபெற்றது.